ஸ்ரீ ஆழ்வார்திருநகரி

# ஸ்ரீ அருள்மிகு ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோவில் வரலாறு



பதிப்பாசிரியர் :

வெ. அழகர் ராமானுஜம், M. A. M. Phil.,

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

சென்னை

அணியகம்

1983

# சுவாமி ஆதிநாத ஆழ்வார் கோவில்

அறங்காவலர் குழு

அணைந்தபெருமாள், தலைவர்

சி. இராமசாமித் தேவர்

செ. தங்கராஜ்

ஆர். திருவேங்கடத்தான்

சி. சிதம்பர நாடார்

நிர்வாக அதிகாரி

திரு. சி. பிரம்மமுத்து

ஆழ்வார்திருநகரி

# ஸ்ரீ ஆதிநாதர் ஆழ்வார்கோவில்

## வரலாறு

*ஒருந் தகைமைக்குரியாரு மோங்கிய ஞானியருஞ்*
*சாருந் தனித்தலைவன் சடகோபன்திடம் பதிக்கே*
*வாருமுமக் கோருறுதி சொன்னேனும் மயக்கமெலாந்*
*தீருந்திருக்கறுஞ் சிந்தை செவ்வே நிற்குந் தீங்கறுமே.*

*(சடகோபரந்தாதி)*

**பிரம்மமுத்து B. A.**
*நிர்வாக அதிகாரி*

 *[இதன் விலை ரூ.* **3-00**



சுவாமி நம்மாழ்வார் வைகாசி விசாகத் திருவிழாவின்போது பொலிந்துநின்றபிரான்.

## நன்றியுரை

அருள்மிகு ஆதிநாதர் ஆழ்வார் திருக்கோவில் தல புராணம் இரண்டு பதிப்புகளாக முன் இருந்த நிர்வாக அதிகாரிகள் முறையே திரு. மாதவன் பிள்ளை, திரு. சுப்ரமணியன் ஆகியோரால் வெளியிடப்பட்டுள்ளது.

பொதுமக்கள் பலரின் வேண்டுகோளும், பக்த கோடிகளின் விருப்பமும் இந்நூலின் மூன்றாம் பதிப்பு வெளியாகக் காரணமாக அமைந்தன.

இந்நூலை வெளியிடப் பொருளுதவி செய்த நாலாட்டின் புத்தூர் திரு. வெங்கட்ராம நாயுடு அவர்கட்கும், அவர்தம் துணைவியார் திருமதி சீனியம்மாள் வெங்கட்ராமன் அவர்கட்கும் தேவஸ்தானத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ ஆதிநாதர் ஆழ்வார்
தேவஸ்தானம்
ஆழ்வார் திருநகரி
*4—9—1983.*

**பிரம்ம முத்து, B.A.,**
நிர்வாக அதிகாரி,

# பொருளடக்கம்

# 1. கோவில் அமைப்பு


மேற்கு
தெற்கு
வடக்கு
கீழக்கு
78
77
75
79
47
48
49
50
51
52
53
54
57
59
60
64
67
68
69
71
72
70
33
28
29
23
22
21
20
40
41
39
13
14
17
18
19
10
11a
11b
11c
8
9
7
5
6
3
1

# கோவில் அமைப்பில் குறித்திருக்கும் மண்டபங்கள் முதலிய விபரம்

1 தகரக்கொட்டகை
2 வேதாந்த பாடசாலை
3 இராமாயணக் குறடு
4 தேவஸ்தானம் ஆபீஸ்
5 6, மாடவீதி
7 பெரிய கோபுரம்
8 கொங்கணையன் குறடு
9 கிருஷ்ணன் ஸன்னதி
10 பழைய தேவஸ்தானம் ஆபீஸ்
11 a, b, c கம்பறை
12 குத்துப்பிறை
13 கண்ணாடி மண்டபம்
14 கிளிக்குறடு
15 பலிபீடம்
16 த்வஜஸ்தம்பம்
17 வாகன அறைகள்
18 மண்டகப்படி சாமான் அறை
19 யானைமால்
20 நெல்சேர்
21 நடுக்கோபுரம்
22 ஸன்னதிக் கருடன்
23 சோபானமண்டபம்
24 சயனக்குறடு
25 ஆழ்வார் குறடு
26 ஸ்ரீ ஆதிநாதர் மூலஸ்தானம்
27 பரிவட்டம் அறை
28 பாத்திர அறை
29 இராமன் ஸந்நதி
30 மேலப்பட்டறை
31 நித்தியல் ஆராதனையுள்ள கருடவாகனம்
32 நித்தியல் ஆராதனையுள்ள சேஷவாகனம்
33 அர்த்தமண்டபம்
34, 35 கருவேலம்
36 சேனைமுதல்வர் ஸந்நதி
37 காலி அறை
38 பொன்னீந்த பெருமாள்
39 மடைப்பள்ளி
40 வெஞ்சன சாமான் அறை
41 நித்தியல் வெஞ்சன சாமான் அறை
42 வேணுகோபாலன் ஸந்நதி
43 ஞானப்பிரான் கருடன்
44 ஞானப்பிரான் ஸந்நதி
45 பகல்பத்து மண்டபம்
46 பகல்பத்து குறடு
47 ஆதிநாயகி (தாயார்) ஸந்நதி
48 கட்டளை அறை
49 ஜாடி அறை
50 தசாவதாரம் ஸந்நதி
51 குருகூர்நாயகி ஸந்நதி
52 பன்னிருவர் ஸந்நதி
53 மடைப்பள்ளி
54 இராப்பத்து மண்டபம்
55 ,, பெருமாள் குறடு
56 ,, ஆழ்வார் குறடு
57 திருப்புளி ஆழ்வார்
58 பரமபத வாசல்
59 ஆழ்வார் சோபன மண்டபம்
60 ஆழ்வார் அர்த்த மண்டபம்
61 ஆழ்வார் மூலஸ்தானம்
62 பொன்குறடு
63 ஆழ்வார் திருமஞ்சனக் குறடு

(தொடர்ச்சி இறுதிப் பக்கம்)

# 1. ஆழ்வார்திருநகரி

இவ்வூர் திருநெல்வேலி ஜில்லாவில், திருநெல்வேலியி லிருந்து திருச்செந்தூர் செல்லும் இருப்புப்பாதை நடுவிலிருக் கிறது. இவ்வூருக்கு வடக்கே தாம்பிரபர்ணி ஆறும், தெற்கே கடம்பாக் கால்வாயுமுள்ளன.

ஊருக்கு நடுவில் ஆதிநாதர் ஆழ்வார் கோயிலும், தெற்கு மாடத் தெருவில் கீழ்ப்புறம் திருவேங்கடமுடையான் கோயி லும், மேல்புறம் திருவரங்கநாதன் கோயிலும், வடக்கு மாடத் தெருவின் மத்தியில் பிள்ளை லோகாச்சாரியார், அழகர், தேசிகர், ஆண்டாள் கோயில்களுமிருக்கின்றன.

கோயிலின் முன் தென்வடக்காகச் சித்திரைத் தெருவும், சித்திரைத் தேருமுண்டு. மேலத் தெருவிற்கு மேற்கே உடைய வர் கோவிலும், உய்யங்கொண்டார், பெரியநம்பி, கிருஷ்ணன், திருக்கச்சிநம்பி, கூரத்தாழ்வான் கோவில்கள் உள்ளன. இவ் விடத்திற்கு இராமானுச சதுர்வேதி மங்கலம் என்று திருவாய் மொழிப்பிள்ளை காலத்தில் பெயரிட்டனர். ஆழ்வார் கோவி லைச் சூழஉள்ள இடம் ஸ்ரீ பராங்குச சதுர்வேதி மங்கலம் என்று 700 வருஷங்களுக்குமுன் பெயர் பெற்றிருந்தது. வடக்கு ரதவீதியில் நம்பிள்ளை வடக்குத் திருவேங்கடமுடையான் கோயில்களும் உள.

ஆழ்வார் காலத்தில் திருக்குருகூர் என்று ஆழ்வார்திருநக ரிக்குப் பெயர். தாம்பிரபர்ணி நதிக்குத் தண்பொருநல் என்று பெயர்.

**(குருகு—கொக்கு, நாரை, குருக்கத்தி, சங்கு முதலிய பல பொருள் ஒரு சொல்).**

குருகூரைச் சூழ ஐந்து மைல் சுற்றளவுள்ள இடம் திரு வழுதி வளநாடு என்று பெயர் பெற்றிருந்தது. இந்நாட்டை

நம்மாழ்வாராகிய காரிமாறன் சடகோபனின் முன்னோர் சிற்றசராக இருந்து ஆட்சி புரிந்து வந்தனர். இவ்வழுதி வள நாட்டில் ஆறு பெரிய ஊர்களும், அவற்றில் ஒன்பது திருமால் கோயில்களும் இருந்தன.

## 3. நவதிருப்பதிகள்

அவை 1. திருக்குருகூர் ஆதிநாதர் கோயில், 2. திருப்புளிங் குடி காய்சின வேந்தர், 3. வரகுணமங்கை (நத்தம்) விஜயா சானர், 4. ஸ்ரீவைகுந்தம் கள்ளப்பிரான் கோவில் (இப்பொழுது புளிங்குடி சிறு ஊராகிக் கள்ளபிரான் இருந்த வைகுந்தம் பெரிய ஊராக மாறியுளது.) 5. குளந்தை என்னும் பெருங் குளம் மாயக்கூத்தர் கோயில், 6. தென் திருப்பேரை மகர நெடுங்குழைக்காதர் கோயில், 7. துலைவில்லி மங்கலத்துள் நின்ற கோலத் தேவபிரான் கோயில், 8. இருந்தகோலச் செந் தாமரைக் கண்ணர் (அரவிந்த லோசனர்) கோயில், 9. திருக் கோளூர் வைத்தமாநிதிப் பெருமாள் கோயிலுமாகும். இவை நம்மாழ்வாரால் பாடப்பெற்ற நவதிருப்பதிகளாகும்.

ஸ்ரீ ஆதிநாதர் கோயில் ஒரு காலத்தில் தாம்பிரபர்ணியாற் றின் கரையில் இருந்தது. பின்னர் கோயிலையும் ஊரையும் பெரிதாயமைக்கும்பொழுது வடக்கே கரையை தள்ளி வைத்து அலகல்லும் படித்துறையும் கட்டினர். ஸ்ரீஆதிநாதர் கோயி லும் புளியமரமும் ஆற்றை யொட்டியிருந்தன. அப்புளியமரம் இன்னும் ‘பொந்தாயிரம் புளியாயிர’ மென்ற பழமொழிப்படி பல பொந்துகளுடன் முதிர்ந்திருக்கிறது.

இவ்வூரின் விரிவான வரலாறும், மக்களும் அவர்களுடைய பழம்பெருமைகளும், குரு பரம்பரை, குருகாமான்மியம், திருப் பணிமாலை, வாகனகவிமாலை, வழிவழியாகச் சொல்லக் கேட்டு வழங்கிவரும் கதைகள், முதலியன கல்வெட்டுகளில் காணலாம்.

# ஸ்தல மஹாத்மியச் சுருக்கம்

பிரம்மா, திருமாலை வைகுந்தத்தில் வணங்கி வேண்ட அவர் ''உன்னைப் படைப்பதற்கு முன்பே தாம்பிரபர்ணி நதிக் கரையில் ஓர் இனிய இடத்தைக் கண்டுள்ளோம். அதை ஆதி க்ஷேத்திரமாகக் கொண்டு வழிபடு'' என்று கூறினார்.

நான்முகனும் அவ்வாறே திருமாலிடம ''அவர் குருவாக வந்து உபதேசித்ததால்'' அவ்விடத்திற்குக் குருகாக்ஷேத்திரம் என்று பெயரிட்டு வழிபடுவதாகக் கூறினார். திருமாலும் இயைந்து வந்து தங்கினார். உலகம் ஊழியிலழிந்தாலும் இவ் விடம் அழியாது. நான்முகனும் மண்ணுலகிற்கு வந்து திருமால் உகந்தருளின இடத்தில் வேதியைக் கற்பித்து ஆதிநாதனை ஆராதித்துச் சத்யலோகம் சென்றார்.

முனிவர்கள், பல திருப்பதிகளையும் கண்டு குயில் கூவும் பொழில் சூழ்ந்த, குன்ற மாடத்திருக்குருகூரடைந்தனர். அன்று தண்பொரு நல்யாற்றின் வழியாக ஒரு வலம்புரிச் சங்கு, தன் இனத்துடன் வந்து, திருச்சங்கணித் துறையிலேறி ஸ்ரீ ஆதிநாத வேதியைச் சுற்றி வந்து மாலையில் வந்த வழியே சென்றது.

நடு இரவில் திங்கள் தோன்றித் திக்கெல்லாம் ஒளி பரப் பிற்று. முனிவர்கள் உள்ளத்தில் ஆதிநாதனை எண்ணிக் கண்டு கொண்டிருந்தனர்.

அப்பொழுது ஒரு வேடன், ஓர் யானையைத் தொடர்ந்து வந்து குருகூரில் பொருது கொன்றான். அவ்வியானையும் அவனைக் குத்திக் கொன்றது. உடனே யமனுடைய ஏவலர் ''கொடிய வேடனையும், யானையையும் எரிவாய் நிலையத் திற்கு'' அழைத்துப் போக வந்தனர். இந்திரன் ஏவலர் ''பொருது மாண்டதால் இருவரையும் வீர சுவர்க்கத்திற்கு அழைத்துச் செல்ல வந்தனர். இருசாராரையும் அகற்றி

விட்டுத் திருமாலின் ஏவலர், ''குருகூரிலிறந்ததனால் வைகுந்தத் திற்கு'' அழைத்துச் சென்றனர். அவ்வேளையில், இவ்விடத் தின் பெருமையும், தூய்மையும் விளங்கிற்று. நாராயணனைத் தொழுவதற்கு நான்முகன் வர அவனுடன் வசிட்டரும் வந்தார். அவரை முனிவர்கள் வணங்கி வேண்ட அவர் ''தாந்த க்ஷேத் திரம்'' என்று பெயர் பெற்ற பின்வரும் வரலாற்றைத் தெரிவித் தார்.

''சாளக்கிராம பர்வதத்தில் அந்தணச் சிறார்கள் ஓராசிரி யரிடம் மறை பயின்று வந்தனர். அவர்களில் ஒருவன் விளை யாட்டாகக் கல்வியைப் பொருட்படுத்தாதிருந்தான். அவனை 'நீ ஓர் இழிந்தவனாய்ப் பிறந்துழல்வாய்'' என்று ஆசிரியர் ஒறுத்துக் கூறியனுப்பி விட்டார்.

அவன் திருமால் கோயில்களிலுள்ள புற்களைச் செதுக்கிப் பசுக்களுக்குணவாக விற்று வாழ்ந்தான். அதனால் திருமால் திருவருள்புரிந்து, ''அவன் அடுத்த பிறப்பில் இழிஞனாய்ப் பிறந்தாலும், திருமாலடியாருள் ஒருவனாகி அன்பினால் வீடு பேறெய்துவான்'' என்றருள் புரிந்தார்.

மறுபிறப்பில் இழிஞனாய் பிறந்தும் நல்லுணவுண்டு, நல் லொழுக்கமும், கடவுளன்புமுடையவனாய் விருப்பு, வெறுப் பற்றுத் தாந்தன் என்ற பெயருடன் விந்திய மலைக்கு வர, அங்கே விண்ணிலிருந்து உண்டாகிய ஒலியால் பொருநல் யாற்றுத் திருச்சங்கணித் துறையின் தென்கரையிலுள்ள திருக் குருகூரையடைந்து ஸ்ரீ ஆதிநாதனை வழிபட்டு வந்தான்.

அவுணரால் வலியிழ்ந்து, நான்முகன் ஏவலின்படி குரு கூரடைந்து, திருமாலைத் தொழுது வலிமை பெற வந்த விண் ணவரும், வானவர்கோமானும் தாந்தனை வெறுக்க, அவன் வடகிழக்கே கூப்பிடு தூரத்தில் பொருநலின் வடகரையில் ஆதி நாதவேதியை யமைத்து வழிபட்டான். வானவர்களுக்குக் கண் கெட்டது. அவர்கள் வகுத்த ஓர் உரு வெளித் தோற்றம், ''நீங்கள் பரம பாகவதனான தாந்தனைப் பிறப்பாலிழிந்தவ னென்றெண்ணிக் குற்றப்பட்டீர்கள். அவனடி பணிந்து,

அறியாதிகழ்ந்த பிழையைப் பொறுத்தருள வேண்டிக் கொள் ளுங்கள்'' என்று கூறியது. அவர்களுமவ்வாறு செய்ய, அருள் நிறைந்த அடியவன் தாந்தன் ஆதிநாதனை வேண்ட, அவர் விண்ணவர்க்குக் கண்ணருளினார். தாந்தனுக்குக் தேவியரு டன் காட்சி கொடுத்துத் திருவடியுமருளினார். ஆதிநாதர் கோயில் அர்த்த மண்டபம் முதற்படிக்கட்டில் தாந்தனுருவம் பொறிக்கப்பெற்றுள்ளது. தாந்தன் கற்பித்து வழிபாடு புரிந்த வட கரையிலுள்ள இடம் அப்பன் கோவிலாகும்.

அதைச் ''செம்பொன் மாடத்திருக்குருகூர்'' என்பர். காரி யார் அரண்மனையும், நம்மாழ்வார் பிறந்த இடமும், காரி மாறன்களமும் உளதென்றும் கூறுவர். திருவைகாசி உத்ஸவம் எட்டாவது நாளில், ஸ்ரீநம்மாழ்வார் அங்கு எழுந்தருளித் தவழ்ந்த கிருஷ்ணன் கோலம் கொண்டருளுவதுண்டு. தண் பொருநலின் வடகரையில், ஆழ்வார் பிறந்த செம்பொன் மாடத்திருக்குருகூர் இருந்ததென்பதை மாறனலங்காரத்திற் காண்க.

முனிவர்கள் பின்னும் இவ்வூரின் பெருமையை அறிவிக்க வேண்ட, வசிட்டர் கூறுகிறார். ஒரு வேடன், தீத்தொழில் புரிந்து பல்லுயிர்களையும் கொன்றுவாழ்ந்தான். அவன் விந்யதி மலையில் தாந்தன் தங்கிய ஆலமரத்தடியில் அவன் அடிப்பொடிபட்டு, மறுபிறப்பில் சங்கனென்னும் முனிவனாகப் பிறந்து, கடுந்தவம் புரிந்து வந்தான். விண்ணவர் கோமான், இவன் தவத்தைக் கண்டு முறையிட, நாரதர் வந்து, சங்கன் தவஞ்செய்யும் வரலாற்றை வினவினார். அவர் ''எல்லா விறைமைக் குணங்களுள்ளாரையும் நோக்கிநோன்பு நோற்று, எட்டுத் திசையும் காவல் புரிகிறவருள் ஒருவனாக விரும்பு கிறேன் என்றான்''. நீ திருமாலை மேலான கடவுளாகக் கருதாதனால் உவர்க் கடலில் சங்காகப் பிறப்பாய்'' என்று கூறினார். சங்கன் அறியாது இயற்றிய பிழைபொறுத்தருள் புரிய வேண்ட, நாரதரும், ''நீ சங்காகப் பிறந்தாலும், தெற்கே தண்பொருநல் கடலில் கலக்குமிடத்திலொரு காத வழியிலுள்ள குருகூரிலேறி, ஆதிநாதவேதியை ஆயிரம்

ஆண்டுகள் சூழவந்து, அவரருள் வாய்க்கப் பெற்று வாழ்வா யாக-' என்றருள் புரிந்தார்.

அப்படியே சங்கனும் தன் நோன்பின் வலிமையால், சங்கா கிப் பொருநல் நதி வழியாக வர, வடகரையில் உள்ள திருப்பதி யைக் கண்டு ''இதுவோ குருகூர்!'' என்று எண்ணி மீண்டும் தென் கரையில் கூப்பிடு தொலைவிலுள்ள திருக்குருகூரடைந் தது. நாரதர் வந்து எட்டெழுத்துரைத்து ''நீ முன்பு கண்டது தாந்தன் வழிபட்ட இடமென்றும், தெற்கே காண்பது ஸ்ரீ ஆதி நாதர் கோயிலருகில் வராக நாராயணர் உலகெடுத்து இருந்தா றிய இடம் என்றும், இதன் வடக்கே புளியமரமுள்ள இடம் சேஷக்ஷேத்திரமென்றும் கூறி இவற்றைச்சுற்றி வந்து ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு ஆதிநாதரை அறிவாய் என்றார். ''1000 ஆண்டுகள் கழிந்தன, இன்று மாசி மகமாதலால் இன் னும் இரு திங்களில் சித்திரை மாதத்து உத்திர நாளில் சங்கன் ஆதிநாதரைப் பார்க்கப் போவதைக் காண்பீர்கள்'' என்றார் வசிட்டர்.

சங்கவரசன், தன் இனங்களுடன் வழக்கமாக வந்து செல் லும்பொழுது ஒரு நாள் ஒரு திமிங்கிலம் சங்குகள் வராதபடி முகத்துவாரத்தை மறித்துக்கிடக்க 'சங்கங்கள் திருமாலை எண்ணி வருந்தின. ஸ்ரீ ஆதிநாதனருளால் திமிங்கிலமென்னும் பெரிய பிராணி அத்திமிங்கிலத்தை விழுங்கிச் சென்றது. பின்பு வழக்கம்போல் சங்குகள் தம் வழிபாட்டைச் செய்தன.

சங்கின் மன்னன் தன் இனத்திற்கு மெய்யறிவுண்டாகப் பல உண்மைகளைக் கற்பித்தனன்.

ஒரு நாள் முனிவர்களுக்கு ஸ்ரீ வராக நாராயணர், மடியில் பூமிப்பிராட்டியை வைத்துக் கருடனுடன் கனவில் காட்சியளித் தார். அதனால் இவ்வூர் வராக க்ஷேத்திரமானதை உணர்ந் தனர்.

வேறொரு நாள் ஆதிநாதப் பெருமாள் சங்கு சக்கரம் தாங்கிக் கனவில் தோன்றினார். அவரிடமிருந்து அனந்தாழ் வான் திருப்புளியாக வந்து அதன்கீழ்த் திருமால் சடகோபு

முனியாகத் தமிழ்மறை செய்து தங்கப்போவதையும் அறிந்து மகிழ்ந்திருந்தனர்.

சித்திரை உத்தர நாளில் வழக்கம்போல் சங்கவரசன் தன் னினத்துடன் ஆயிரம் முறை வலம்வந்து நிற்க, சிவபிரான் ஆன் விடையேறி வந்தார். நான்முகன் அன்னத்திலூர்ந்து வந்தார். விண்ணவர்களும், எட்டுத் திசையின் காவலர்களும், யாழிசை யோரும், தெய்வப்பெண்டிரும், ஐராவதத்திலிவர்ந்து வந்த வானவர்கோனுடன் வந்தனர்.

ஆடல். பாடல் அழகினால் கண்ணைக் கவரும் அரம்பை ஊர்வசிகள் ஆடல் புரியச் சேனை முதல்வர், தண்டக்காரர், சாட்டைக்காரருடன் வழிவிலக்க, முனிவரும் ஊரவரும் கை தொழக் கருட வாகனத்தில் திருமகள், மண்மகள், ஆய்மகளு டன் ஸ்ரீ ஆதிநாதப் பெருமாள் காட்சி கொடுத்து கருடனை விட்டிறங்கிச் சங்கனுக்குத் தன் இனத்துடன் வீடுபேறருளினார். சங்கன் ஏறிவந்த துறைக்குத் ''திருச்சங்கணித்துறை'' என்று பெயரளித்து அத்துறையில் நீராடுவார். தம் தீவினை போக்கி நலமந்தமில்லதோர் நாடருள உயர்வளித்தார். இவ்வூரிதனால் 1. 'ஆதிக்ஷேத்திரம், 2. வராக க்ஷேத்திரம், 3. சேஷ க்ஷேத்திரம் 4. தீர்த்த க்ஷேத்திரம், 5. தாந்த க்ஷேத்திரம் என ஐந்து பெயர் கள் பெற்றது.

**1. ஆதி க்ஷேத்திரம் :**

ஒன்றுந் தேவு முலகு முயிருமற்றும் யாதுமில்லா
அன்றுநான் முகன்றன்னோடு தேவருலகோடுயிர் படைத்தான்
குன்றம்போல் மணிமாட நீடு திருக்குருகூர்தனுள்
நின்ற வாதிப்பிரானுறையுமூர்.

**2. வராக க்ஷேத்திரம் :**

ஏனத்துருவில் உலகிடந்த ஞானப்பிரான் கோயிலுள்ள ஊர்.

**3. சேஷ க்ஷேத்திரம் :**

திருவனந்தாழ்வான் உறங்காப்புளியாகி வாழுமிடம். இராமாவதாரத்தில், இலட்சுமணன் சாபம் பெற்றுக் குருகூரில்

திருப்புளியாகப் பிறந்தார். இராமர் ஆழ்வாராகிப் பிறந்து அதனடியில் கோயில் கொண்டருளினார்.

**4. தீர்த்த க்ஷேத்திரம் :**

பொருநல் சங்கணிதுறை வளம் கெழுமிய ஊர்.

**5. தாந்த க்ஷேத்திரம்:**

தாந்தன் என்னும் இழி பிறப்பினன். திருமாலன்பால் தேவரும் தொழ உயர்ந்த ஊர்.

## 5. நம்மாழ்வார் வரலாறு

(குரு பரம்பரையிலுள்ளதன் சுருக்கம்)

திருமாமணி மண்டபத்துத் திருமகளுடன் வீற்றிருக்கும் திருமாலை, உடனுறையும் அந்தமில் பேரின்பத்தழிவில் வீடு வாழ் அடியார் வேண்டத் தமிழ் மறையருளித் தரணியையுமுய் விக்கக் கருதி, கலிபிறந்த நாற்பத்து மூன்றாம் நாளில் வைகாசி விசாகத்தில், திருவழுதி வளநாட்டுத் திருக்குருகூரில் உடைய நங்கையாருக்கும் காரியாருக்கும் திருமகனாய்ப் பிறந்தார் மாறன் சடகோபன்.

அவரது குடிவழி:-



அச்சுதர்
|
செந்தாமரைக் கண்ணர்
|
செங்கண்ணர்
|
பொற்காரியார்
|
காரியார்
|
மாறன் சடகோபன்

காரியார் மலைய நாட்டிலுள்ள திருவண் பரிசாரத்தில் திருவாழ்மார்பரின் மகள் உடைய நங்கையாரை மணந்து, திருக்குறுங்குடி நம்பியருளால், அவரையே மாறன் சடகோபன் என்னும் மகனாகப் பெற்றார். யுக வருடம் ஆனி மாதம் மூல நாளில் திருவனந்தாழ்வார் திருப்புளியாகத் தோன்றி வளர்ந்தார். நம்மாழ்வார் மரபினர் பூவைசிய குலத்தவர் (வேளாள மரபினர்). ஆழ்வார்சேனை முதல்வரின் அம்சபூதர். பிறந்த பிள்ளை மண்ணில் தோன்றியதும் மயக்கவரும் "சடம்" என்னும் காற்றைக் கோபித்துக் கருவிலேயே திருவுடன் கண்விழியாதும், வாய் அழாதும், உடல் ஆடாததும் தாய்ப்பாலுண்ணாதும், உள்ளொளியுடன் உருவும், திருவும் பெற்று வளர்ந்தார். சடவாயுவைக் கோபித்த இவருக்குச் சடகோபன் என்ற காரணப்பெயர் உண்டாயிற்றென்பர். (சடம்-மாயை). இப்படி இருக்கும் குழந்தையைப் பெற்றோர் பெருங்கலக்கமும் துன்பமும் அடைந்து ஸ்ரீ ஆதிநாதரிடம் குழந்தையைப் புளிய மரத்திற்குப் பொற்றொட்டிலிட்டுக் கொண்டு வந்தனர். ஆழ்வார் அங்குத் தெற்கு நோக்கித் திருஞான முத்திரையுடன் பதினாறு ஆண்டுகளிலிருந்து தவம் இயற்றினர்.

இஃதிவ்வாறாக தண்பணை சூழ்ந்தழகாய திருக்குருகூருக்குத் தென்கிழக்கேயுள்ள திருக்கோளூரில், மாறன் சடகோபன் வண்குருகூர்நம்பி பிறப்பதற்கு முன்பு அந்தணர் குலத்தில் மதுரகவியாழ்வார் தோன்றி மறைவல்லாராய்த் திருமாலைத் தொழுது வாழும்பொழுது ஒரு நாள் அவரது வயலில் நெற்

பயிரை ஒரு கிழப்பசு மேய்ந்தது. அதைக் கண்டு கையில் கம்புடன் அதைத் துரத்தினர். அந்தக் கிழப்பசு ஓடிச்செல்லும் வழியிலிடறி வீழ்ந்திறந்த்து. உடனே அருளுருக்கொண்ட அவ் வந்தணர் பெரிதும் வருந்திச் ''செய்த தீவினைதீர நன்னீராடும் பொருட்டு'' வடக்கே அயோத்திவரை கால்நடையாகச் சென் றார். அங்கிருந்து தவம் புரிந்து வரும்பொழுது, ஓரிரவில் தெற்கே பேரொளியைக் கண்டார். கண்டு அவர் இரவுதோறும் காணும் கண்ணைக்கவரும் கதிரொளியை நோக்கி நடந்தார். பல நாட்கள் சென்றதும் செம்பொன்மாடத் திருக்குருகூரைச் சேர்ந்தவுடன் ஒளி மறைந்து விட்டது.

பல்லாண்டுகளுக்கு முன்பே கொடிநெடுமாடக் கோளூரை விட்டகன்ற செந்தண்மை பூண்ட அந்தணர்க்கு நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன் தோன்றிய வரலாறு, தெரியாததால் ''இவ்வூரில் என்ன புதுமை ஏற்பட் டுள்ளது'' என்று கண்டவரிடம் கேட்க, அவர்கள் காரியார் காதற்சிறுவன் பிறந்து வளரும் வகையைக் கூறினர்.

உடனே நாவலர் ''திருப்புளியினடியிலே திருவுடன் வளரும் பிள்ளைக்கு உயிருண்டோ'' என்று அறியச் சிறு கல்லொன்றை யெடுத்து அருகேயுள்ள திருமதிலில் எறிந்தார். கல் எறி ஒலி கேட்டதும், மெய்யியக்கமுண்டாயிற்று. அதைக் கண்டு, இவ் வுள்ளொளியும், புறவொளியுமுடைய மகவு பேசுமோ' என்றறியச் ''செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறந்தால் எத்தை தின்றெங்கே கிடக்கும்? என்று வினாவினர். ''அத்தைத் தின் றங்கே கிடக்கும்'' என விடை வந்தது.

(செத்தத்தின் வயிற்றில் = அறிவற்ற யாக்கையினுள்ளே; சிறியது பிறந்தால் = சிறிய உயிர் தோன்றினால்; எத்தைத் தின்று = எதை உண்டு, எங்கே கிடக்கும் = எவ்விடத்தில் தங்கியிருக்கும்?; அத்தை = அவ்வுடலுடன் கூடிய இன்பதுன் பங்களை; தின்று = நுகர்ந்து; அங்கே = அவ்வசித்தலாகிய மெய்யில்; கிடக்கும் = பொருந்தி வாழும்).

இவ்விடையைக் கேட்டதும், மதுரகவிகள் அடிபணிந்து மெய்யுணர்வினால் 'இக்கடவுள் தன்மை கனிந்த பிள்ளையின்

உண்மையுணர்வை' யுணர்ந்து உலகோருய்யத் திருமாலின் இயல்புகளை எடுத்து விளக்கியருள வேண்டு'மென்று விண்ணப்பஞ்செய்தார்.

அவ்வாறே திருமாலிடத்து ஆராக் காதலில் ஆழ்ந்த ஆழவார் 1. திருவிருத்தம், 2. திருவாசிரியம், 3. பெரிய திருவந்தாதி, 4. திருவாய்மொழிகளைத் திருவாய் மலர்ந்தருளினார். மதுரகவிகள் பட்டோலைப் பிடித்தெழுதினார். ஆயிரம் இன்றமிழ் பாடத் திவ்ய தேசம் நூற்றெட்டினுமிருந்து திருமால் கருட வாகனத்தில் வந்து காட்சி கொடுத்தருளினர்.

நம்மாழ்வார் பாடிய 33 திவ்யதேசப் பெருமான்களின் உருவங்கள் திருப்புள்ளியைச் சுற்றி: எடுத்திருக்கும் கற்சுவர்களில் பொறிக்கப் பெற்றுள்ளன. அருள்கொண்டு ஆயிரம் இன்றமிழ் பாடிய பாவின்னிசைப் பாடித் திரிந்ததனால் மதுரகவி என்னும் காரணப் பெயரை அந்தணர் பெற்றார். அதுமுதல் ஆழ்வாரிடம் ஆழ்ப்பட்ட மதுரகவியாழ்வார் ''கண்ணினுண் சிறுத்தாம்பு'' என்று தொடங்கிய பதினொரு பாசுரங்களைப் பாடி அவர் புகழை ஏத்தினார்.

ஸ்ரீ நம்மாழ்வார் முப்பத்தைந்து யாண்டுகள் சென்றதும் மாசி மகத்தில் பூதவுடல் நீத்தார். அப் பூதவுடல் புளியமரத்தடியில் பள்ளிப்படுத்தப்பெற்றது. அங்கே நம்மாழ்வார் கோயிலேற்பட்டது.

ஸ்ரீ நம்மாழ்வாரின் முடிவுகாலத்தில் மதுரகவிகள், அர்ச்சா ரூபமளிக்க வேண்டிக்கொண்டதற்கிணங்கத் தாம்பிரபர்ணி யாற்று நீரைக் காய்ச்சச்சொல்லி அதிலுளள செம்பாலாகும் உருவங்களையுண்டாக்கச் சொன்னார். முதலில் அஞ்சலி செய்யும் கையுடனும். திரிதண்டுடனும் வந்த உருவைக் கண்டு, வியந்துகேட்க, ஆழ்வார் ''பொலிக பொலிக'' என்று திருவாய் மொழியில் கூறியவண்ணம் திருமால் பெருமையைத் தெரிவித்து வைணவ மதத்தைப் பெருக்கப் போகிற யதிராசனுரு அதுவென்று, தன் வலத் திருவடியை எடுத்துக் காண்பித்தனர். அதில் உடையவர் உருவம் காணப்பெற்றதால் இராமானுச

ராக அவரை வைத்து, மறுமுறையும் நீரைக் காய்ச்சிச் சின்ன முத்திரையுடன் உண்டான வண்சடகோபன் உருவைப் பெற்ற னர், அவ்வுருவில் ஆழ்வாருடலிலிருந்து ஒளி பாயப் பூதவுடல் மாய்ந்தது. பொன்கள் ஐந்திலொன்றான செப்புடல் நிலைத்த தென்ப.

பூதவுடலைப் பள்ளிப்படுத்திய இடத்தில் நம்மாழ்வார் கோயிலமைத்து, அக்கோயிலில் ஆழ்வார் உருவத்தையமைத்து திருவைகாசித் திருவிசாகத் திருவிழா பத்தும் மதுரகவிகள் கண் டருளினார். 'உண்டோ வைகாசி விசாகத்திற் கொப்பொரு நாள்'' என்று அவ்விழா நாள் சிறப்புற்றது.

ஆழ்வார் புகழை ஏத்தித்திரியும் மதுரகவிகளை மதுரைத் தமிழ்ச் சங்கத்தார் கண்டு ஆழ்வார் பாசுரம் சங்கப் பலகையில் இடம் பெற்றதா'' என்று கேட்க ஆழ்வாரருளால் ''கண்ணன் கழலிணை'' என்ற அடியை எழுதிய முறியைப் பலகையில் வைக்க அது ஏனைய புலவர்களை நீக்கி, முறியை மட்டுந் தாங்கி நின்றது. உடனே அவர்களும் திருவாய்மொழியின் ஏற்றத்தைப் புகழ்ந்தனர்.

## நாதமுனிவந்து நாலாயிரம்பெறல்

மதுரகவிகள் காலத்திற்குப் பின்பு நாலாயிரமுங் காணப் படவில்லை. நம்மாழ்வார் பாட்டில் பயின்றவர் வீடுபேறெய்து வரென்றிருந்ததனாலும், இறக்கத் துணிந்தவர்களும் படித்து வரலாயினர். அதனால் ஆட்கொல்லிப் பாட்டை அழிக்க முயன்றொழித்தனர்.

பிற்காலத்தில் தோன்றிய நாதமுனிகள் கும்பகோணத்தில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் சிலர் ''ஆராவமுதே'' என்னும் பதிகத்தை, (ஓர் முதியவள்) பாடக்கேட்டு, ''இப்பத்துப் பாட்டுடனும் சேர்ந்த ஆயிரமும் எங்குள'' வென்று கேட்டார். அவர்கள் தமக்குத் தெரியாதென்று வழங்காத வரலாற்றைக் கூறினர்.

ஆயிரத்தையுமடையத் தென்குருகூரில் வந்து திருக்கோளூர் மதுரகவிகளின் வழியினரிடம் கேட்க அவர்களும் தமக்குத் தெரியாதென்றும், நம்மாழ்வாரைத் தம் முன்னோர் பாடிய ''கண்ணிநுண் சிறுத்தாம்பு'' என்னும் பத்துப்பாட்டுத்தான் தெரியுமென்றுங் கூறினர்.

''கண்ணிநுண் சிறுத்தாம்பு'' என்று தொடங்கும் பதிகத்தைப் புளியமரத்தடியிலிருந்து ஒருமையுற்ற எண்ணத்துடன் ஐம்புலனையும் அடக்கிப் பன்னீராயிரமுறை கூறினால் ஆழ்வார் தோன்றுவார் என்று உரைத்ததைக் கேட்டு அவ்வாறே செய்ய ஆழ்வார் ஓர் முதியவனாக வந்து, நாதமுனியிடம் ''இக்கலியில் ஆழ்வாராவது காட்சியளிப்பதாவது!'' என்றிகழ்ந்தனர். சிறிதும் உள்ளஞ்சோராத நாதமுனி 'தன் எண்ணம் ஈடேறாமற் போவதில்லை' என்று விடையிறுத்துச் சொல்ல ஆழ்வார் உருவெளியாய் நின்று ''ஏழு திரையிட்டு யாம் கூறுவதை எழுதி நாலாயிரமும் பெற்றுக்கொள்'' என்று சொன்னார். அவ்வாறு நாதமுனிகளும் நாலாயிரத்தையும் பெற்று, அவற்றைப் பண் வகுத்துப் பாடித் தம்மூராகிய வீரநாராயணபுரம் போய்ச் சேர்ந்தார். போகுமுன் திருவத்யயன உத்ஸவத்தைத் திருவரங்கத்தில் ஆழ்வாரை எழுந்தருளப் பண்ணி நடாத்தினார்.

## இராமானுஜர் வரவு

இராமானுஜர் குருகூருக்கு வரும்வழியில், திருப்புளிங்குடிப் பெருமாளைக் கண்டு கைதொழுது, வலம்வரும்பொழுது, பிரகாரத்தில் நெல்லி வட்டாடிய அர்ச்சகர் மகளை, ''இன்னும் குருகூர் எவ்வளவு தூரம் இருக்கும்'' என்று கேட்க அவள் ''முக்கோலேந்தித் துவராடையணிந்த மூதறிவாள்,'' கூவுதல் வருதல் செய்திடா யென்று குரை கடல் வண்ணன் றன்னை மேவி நன்கமர்ந்த வியன்புனல் பொருநல் வழுதி நாடன் சடகோபன்'' என்று ஆழ்வார் இவ்வூர்ப் பெருமாளைப் பாடும்

போது அருளிச்செய்த வணணம "கூப்பிடு தொலை'' என்று கூறினாள்

வகுளசடகோபன் தண்டமிழப பாசுரத்தை அப்பெண் கூறியதும் ஆழவார் மீதுள்ள ஆராக்காதலால் அப்படியே தரையில் வீழந்து அவளை ஆழ்வாராக எண்ணி வணங்கினார். இதையறிந்த அர்ச்சகர், தன் மகளை இராமானுஜர் திருவடி தொழச் செயது, மன்னிப்புக் கேட்டனர். இராமானுஜர் திருக்குருகூரில் பொலிந்து நின்ற ஆதிப்பிரானையும் காரிமாறன் சடகோபனையும் கண்டு வழிபட்டபின், மதுரகவிகள் பிறந்த மாண்புடைக் கொடி நெடுமாடக் கோளூருக்குச் சென்றார்.

அவ்வூரையணுகியதும, அங்கிருந்து ஓர் பெண்மணி வேறொரு ஊருக்குக் குடிபோவதை வழியில்கண்டு, ''எல்லாரும் புகுமூரை விட்டு நீவீர் வெளியேறிப் போவதெதற்கு? என்று கேட்டார். ''திண்ணம் என் இளமான் புகுமூர் திருக்கோளூரே'' என்பது ஆழ்வார் அருளிச் செயல். அதற்கவர் பல அடியார்களின் பெயர்களைக்கூறி, ''யானென்ன அவர்கள் செய்த அருஞ்செயலகளில் ஏதாவதொன்றியற்றினேனா''? என்று விடையிறுத்தாள். திருக்கோளூர்ப் பெண்பிள்ளையின் அறிவு கண்டு வியந்து அன்று அவளில்லத்தில விருந்துண்டு ஏகினார்.

## கம்பர் வந்து வழியில் மீளல்

கம்பர், இராமாயணத்தைத் திருவரங்கத்தில் அரங்கேற்றப் போகும்பொழுது 'பெரிய பெருமாள்' நம் சடகோபனைப பாடினையோ? என்று கேட்க அவர் சடகோபரந்தாதி பாடித் 'தருகை நீண்ட' என்னும் பாட்டைத் தொடங்கி ராமாயணத்தைக் கழகத்தில் பாடினார். இவர் குருகூர்க்கு வரும்வழியில் ஏற்றமிறைப்போர் பாட்டையும் கணவனையிழந்த கைம் பெண்ணின் ஒப்பாரியையும் கேட்டு வியந்து இன்னும் கற்றார் வாழும் குருகூரில் நம் கல்வி ஞாயிற்றின் முன் மின்மினிபோலாகுமென்று மீண்டாரென்ப.



மதுர கவிகள் ஆழ்வாரைத் தரிசித்தல்



சுவாமி பொலிந்து நின்றபிரான் கருட சேவையின்
போது அம்சவாகனத்தில் நம்மாழ்வார்.

## ஆழ்வார் திருவரங்கம் செல்லல்

ஸ்ரீமந் நாதமுனிகள், நம்மாழ்வாரைத் திருவரங்கத்திக்குத் திருக்கார்த்திகை நாளில் வரவழைக்கப் பட்டோலை எழுதச் செய்து, திருக்குருகூரில் பொலிந்து நின்ற ஆதிபிரான் அருளிப் பாடுபெற்று நம் சடகோபனை அனுப்பி மார்கழி விழா இருபதும் நடைபெற ஏற்பாடு செய்தார். காலையும் மாலையுஞ் சென்று நண்பகலும் நள்ளிரவும் தங்குவதற்கு ஆங்காங்கே வழியெல்லாம் நாற்கால் குறடு காட்டினார்.

பின்னர் சோழன் தனது நாடாட்சி மீளப்பெற்றுப் பாண்டியர் செல்வாக்குக் குறைந்ததும், ஆழ்வார் அங்கெழுந்தருளுவது நின்றுவிட்டது. காவிரியில் வெள்ளம் வரத் தெப்பத்தில் ஆழ்வாரைக் கரையேற்றுவதும் அரிதாய்ப் போகத் திருவரங்கத்தில் ஒரு நம்மாழ்வார் கோயிலுண்டாக்கிக் கொண்டு நம்மாழ்வாரைக் குருகூரிலேயே பொலிந்துநின்ற ஆதிபிரானை அரங்கனாதனாக் கொண்டு விழா நடைபெற ஏற்பாடு செய்து கொண்டனரென்ப.

திருவரங்கத் திருக்கார்த்திகைப் பட்டோலையும், திருநகரி அருளிப்பாடும இன்னும் நடைபெறுகின்றன. இன்னும் திருவரங்கம் செல்லும் பெரிய பல்லக்கு ஆழ்வார் கோயிலிலிருக்கிறது. நாற்காற்குறடுகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன.

## திருவாய்மொழிப் பிள்ளை

திருவாய்மொழிப் பிள்ளை என்னும் சடகோபதாஸர் மேற்கேயுள்ள காடுதிருத்தி இராமானுஜர் கோயிலமைத்து ஆழ்வாருடனமைந்த உருவை வைத்து இராமானுச சதுர்வேதி மங்கலமுண்டு பண்ணித் திருவாய்மொழி தேர்ந்து வாழ்ந்தார்.

## மணவாள மாமுனிகள்

அவரை ஆசிரியராகக் கொண்ட, மணவாள மாமுனி பொலிந்து நின்ற ஆதிபிரான் முன்புள்ள கருடமண்டபத்தைக்

கட்டினார். அதில் அவர் உரு ஒரு தூணில் காணப்படுகிறது. திருப்புளியின் வடபுறமுள்ள மண்டபத்திலிருந்து திருவாய் மொழியின் பொருளுரைத்தார்.

இப்பொழுது நடைபெறும் வழிபாட்டு முறை அவரமைத்த தாகும். மலையாள நம்பூதிரிகளை நீக்கி அர்ச்சகர்களை வைத்து, அம்முறையை நடாத்தினார். பின்னர் வானமாமலை ஜீயர் ஸ்வாமிக்கும் இராமானுசம் பிள்ளை திருமாளிகை முத லியவற்றிற்கும் தொடர்பு ஏற்பட்டன.

## கல்வெட்டு மரியாதை பெற்றவர்கள்

ஏன்த்துருவாயிருக்கும் ஞானப்பிரான் கோயில் வடசுவரில் வகுளாபரணப்பட்டர் புராண இதிகாசம் படிக்க மரியாதை குறிப்பிடும் கல்வெட்டுண்டு.

நம்பாடுவாரில் குருகாவல் நம்பிக்கும் வண்டுவராபதி முனிக்குமுள்ள ஏற்றமெல்லாம் நம்மாழ்வார் கோயில் வடசுவ ரின் வடமருங்கிலும், கீழ்மருங்கிலும் கல்வெட்டில் காணப் படும். வீடு விடைப் பட்டோலையிலும் காணலாம்.

பாண்டியர், சோழர் இராயர்; நாயக்கர் காலக் கல்வெட்டு களும் திருப்பணிகளும் மிகுதி.

## நவதிருப்பதி கருடசேவை

பண்டல இராமசாமி நாயக்கர், பந்தல் மண்டபம் கட்டி நவதிருப்பதி கருட சேவையும் 1807 கி. பி.யில் ஏற்படுத்தினார். அர்ச்சகர்களையும் மாற்றினார். வைகாசி விஸாக உத்ஸவம் 5ல் நவதிருப்பதி கருட சேவை நடைபெறுகின்றது.

## 6. ஆராய்ச்சி

ஆழ்வார் திருநகரியில் ஒன்பது சிவன் கோயில்களிருந்தன. அவற்றை ஓர் சாத்தாதவர் அழித்து நதியின் அல்லில்ல்லில்

கட்டினார். அதனால் அவருக்கு வயிற்றில் நோவுண்டாக அது தீர்வதாக வடகரையில் காந்தீஸ்வரம் கோயில் கட்டினார். ஏகாந்த லிங்கர் ஏற்பட்ட வரலாறு இது என்பர்.

## கரூர்ச் சித்தர்

வடகரையிலுள்ள காந்தீஸ்வரத்தில் கரூர்ச் சித்தரென்னும் ஓர் முனிவர் வாழ்ந்து வந்தார். அவரிடம் ஓர் நாய் இருந்தது, அது நாள்தோறும் திருக்குருகூர்த் தெருவிலுள்ள எச்சிலை உணவருந்தி வருவதுண்டு. ஓர் நாள் குருகூரிலிந்து நாய் நதியைக் கடந்து வெள்ளத்தில் நீந்திவரும்பொழுது நீர்ச்சுழி யில் அகப்பட்டு மாண்டது. அதன் உயிர் ஒளிபெற்று விண்ணுலகெய்தியது. அதைக் கண்ட சித்தர்,

வாய்க்குங் குருகைத் திருவீதி யெச்சிலைவாரியுண்ட
நாய்க்கும் பரமபத மளித்தாயந்த நாயோடிந்தப்
பேய்க்கும் பரமபதமளித்தாற் பழுதோ? பெருமான் மகுடம்
சாய்க்கும் படிக்குக்கவி சொல்லும் ஞானத் தமிழ்க்கடலே !

என்று பாடி யருள்பெற்றோர் என்ப.

## ஆழ்வார் காலம்

மகிழ்மாறன் சடகோபன், திருக்குருகூர் (திருவாய்மொழிப்) பதிகத்தில் இலிங்கத்திட்ட புராணத் தீரும் சமணரும், சாக் கியரும் என்று கூறுவதனால் சமண பௌத்த சமயந் தோன்றிய இரண்டாயிரத்து நூறுயாண்டுகளுக்குட்பட்ட காலத்தவர் என்பது விளங்குகிறது.

சுச்சுட பட்டருக்குக் கொடுத்த ஸ்ரீ வரமங்கலத்தையும் வர குணபாண்டியர் பெயரிட்ப் பெற்ற வரகுண மங்கையையும் பாடுவதனால் கி. பி. 832 வைகாசி விசாகத்தில் தோன்றி 867 மாசி மகம் வரை வாழ்ந்திருக்கலாம்.

## ஆழ்வார் திவ்ய தேச யாத்திரை

ஆழ்வார் பிறந்து வளர்ந்து ஆண்டுவந்த திருவழுதி வள நாட்டுத் திருப்பதியொன்பதையும் தாய் பிறந்த திருப்பரிசாரம் என்னும் திருவண் பரிசாரத்திற்குச் சென்றுவரும் வழியிலுள்ள மலை நாட்டுத் திருப்பதிகளையும், மதுரை அழகர், திருமலை, திருமோகூர், திருவரங்கம், திருப்பேர் நகர், திருக்குடந்தை வழி யாகத் திருவேங்கடம் வரை (சென்று வந்த விடங்களில் கண்ட) கோயில்களையும் திருவாய் மொழியில் பாடியுள்ளார்.

## ஆதிநாதர் கோயில்

பண்டைநாளில் மலை, நதி, குளங்களின் கரைகளில் மக்கள் கோயிலமைத்து வழிபாடியற்றினர். 'முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய முறையால சொல்லவும் படுமே' என்பது தொல்காப்பியம். பின்னர் கடைச்கங்க நாட்களில் ஒவ்வொரு ஊரிலும் முருகன், சிவன், திருமால், இந்திரன் கோயில்களிலிருந்ததாகவும் புறநானூறு சிலப்பதிகாரம் முதலிய நூற்களிலிருந்து விளங்கும்.

சிவனும், முருகனும், தந்தயும் மகனுமாக ஒரு கோயில மைக்கப் பெற்றனர்.

திருமாலும் சிவனும் ஒருருவில் வைத்தும் (திருப்பதி) பள்ளி கொண்டும் கூத்தாடியும் அருகே வைத்தும் (தில்லை) இலிங்க மும் திருமாலும் அடுத்தடுத்தும்; எதிராக இருக்க வைத்தும், (திருமெய்யம், கரம்பனூர், உத்தமர் கோயில், திருநெல்வேலி, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர்) வழிபட்டனர்,

மருதநிலமாகிய பொருநல்லாற்றின் கரையிலுள்ள திருக் குருகூராகிய ஆழ்வார் திருநகரியில் இந்திரன், சிவன், முருகன் கோயில்களுடன் புத்தப்பள்ளியும்; சமணப் புள்ளியுமிருந்தன. இலிங்கத் திட்ட புராணத் தீரும் என்று திருவாய்மொழிச் செய் யுளில் நம்மாழ்வார் குறிப்பிட்டிருக்கிறார். ஏனைய கோவில் களெல்லாம் அழிந்தன. ஒரு சமண முனிவர் முக்குடைக்கீழ்

சிங்கமைந்து சுமந்த அரியணைமீது இரு கந்தருவர் கவரிவீச, ஆடையணியின்றி மழித்த தலையுடன் மாண்புற இருந்து தவ மியற்றுவதாக ஓர் கல்லுரு திருக்கோளூரினருகே, ரயில்பாதை போடும்பொழுது கண்டு எடுக்கப்பட்டு இப்பொழுது கிராம முனிசீபு கச்சேரியருகே வைக்கப்பட்டிருக்கிறது. முன் காலத்தில் மரத்தாலும் மண்ணாலும் சாந்தாலும் கோயில் உருவங்கள் இயற்றப்பெற்றன. பின்னர் கல் உருவங்களும் செம்பு உருவங் களும் உண்டாயின. பழமையான ஆதிப்பிரான் திருவரங்க நாதன் உருவங்கள் சாந்தாலாக்கப்பெற்றவை. இதனால் இக் கோயில் கற்காலத்திற்கு முன்புள்ள சாந்துக் காலத்திலேற் பட்டதென விளங்கும்.

## ஆழ்வார் நூற் கல்வி

திருக்குறள், தொல்காப்பியம்,முதலாழ்வார்கள் பாடல்கள், கடைச்சங்க நூல்கள், இராமாயணம், பாரதம், நான்மறை ஆகியவற்றின் பொருள்களை இவர் பாடல்களில் காணலாம். "வச்சிர மெய்க்கூன் செழியன் மைந்தன் திருவழுதி" என்று தொடங்கும் நம்மாழ்வார் தாலாட்டுக் காப்புச் செய்யுளி னாலும் பிறகல்வெட்டுச் செப்பேட்டு ஆதாரங்களினாலும், நம் மாழ்வார் 'களப்பிரமரை வென்று, மீண்டும் பாண்டியராட்சி ஏற்படுத்திய வேளிர் மரபாகிய, தாளாண்மை மிக்க வேளாளர் வழியில் வந்த" நின்றசீர் நெடுமாறன் கூன்பாண்டியனுக்கும் புகழ்ச்சோழன் மகள் மங்கையர்க்கரசிக்கும் பிறந்த திருவழுதி யின்மரபில்இளையனாய்ச்சிற்றரசைக்கொற்கையையொட்டிய திருவழுதி நாட்டில் பெற்றவர் வழியில் வந்தவர், இவர் பாட் டனாராகிய போர்க்காரியார் பாண்டியருக்காகக் குழந்தை யென்னும் பெருங்குளத்தில் நடந்த போரில் எதிரியுடன் பொருதுவெற்றி பெற்றவர். மாறன், சடையன் என்னும் பாண்டியன் பெயருக்கும், மாறன் சடகோபன் என்னும் ஆழ்வார் பெயருக்கும் தொடர்பு இருக்கலாம். இதன் விபரம் செந்தமிழ் வாயிலாக அறியலாம்.

## சிற்பம்

கல்வேலையில் ஆழ்வார் பெருமாள் கோயில்களும் திரு மாமணி மண்டபம் திருமஞ்சன மண்டபங்களும் கண்ணாடி மண்டபமும் வேலைத்திறம் பெற்றவை. மொட்டைக் கோபு ரமும் அதன் உருவங்களும் புகழத்தக்க வேலைப்பாடுகளை மைந்தன. மரவேலை, பெருமாள் கோயில் முன்னுள்ள மூன்று மாடங்களுடைய கோபுரத்தின் மூன்று கட்டிடங்களிலும் மரத் தூண், யாழி, சாளரம், சிங்கப்போதிகை உத்தரம், மேற்கட்டு

விதானமெல்லாம் மிகுந்த பெருமையும், உயர்வும் கொண்ட நுட்பமான வேலைத்திறம் பெற்றவை.

## கல் நாதஸ்வரம்

இந்தக் கோவிலில் மிகவும் அருமையான வேலைப்பாடமைந்த கல் நாதஸ்வரம் ஒன்றிருக்கிறது. இது கருங்கல்லில் குடைந்த அதிசய இசைக்கருவியானாலும், மரத்தாற் செய்யப்பட்டதென்றே தோன்றுகிறது. இது சுமார் 1 அடி நீளத்தில் மேல்பாகம் $\frac{1}{4}$ அங்குலமும் அடி பாகம் 1 அங்குலமும் குறுக்களவு உள்ளதாக இருக்கிறது. நாதஸ்வரத்தின் அடிப்பாகத்தில் பிததளைப் பூண் பொருத்தபபட்டிருக்கிறது. இது இந்தக் கோவிலில் பரதநாட்டியம் நடைபெறும்பொழுது வாசிக்கப்பட்டு வெகுநாள் உபயோகப்படுத்தாமலே இருந்து வந்திருக்கிறது. இந்த இசைக்கருவி சுமார் 350 வருடங்களுக்கு முன் கிருஷ்ணப்ப நாயக்கர் காலத்தில் கொடுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இது மோக வீணை என்றும் அழைக்கப்படுகிறது.

## திருவிழாக்கள்

இக்கோயிலில் மாத உத்ஸவமும், வருஷ உத்ஸவமும் மாசி, பங்குனி, சித்திரை, வைகாசி நான்கு பிரம்மோத்ஸவங்களும் நடைபெறுகின்றன. திருவைகாசித் திருவிழாவில் 5-வது நாள் நவதிருப்பதி எம்பெருமான்களும் காலையில் எழுந்தருளி மங்களாசாசனமும், இரவில் ஒன்பது கருட வாகனப் புறப்பாடும் விசேஷமாக நடைபெறுகின்றன. மார்கழி மாதத்தில் நடைபெறுகின்ற திருவத்யயனத் திருநாள் 20 நாட்கள் நடைபெறுவதில் பின்பத்துத் திருவிழா வினிறுதியில் திருமாலால்மயர்வற மதிநலம் அருளப்பட்ட ஸ்ரீ நம்மாழ்வார் அவாவற்று வீடு பெற்ற வரலாற்றைச் சாத்துமுறையாக நடாத்துகின்றனர்.

ஆழ்வாருக்கு 24 போர்வை சாத்தி அவை ஒவ்வொன்றையும் படி களையும்பொழுது கற்பூரம் ஆகி, அரையர் வியாக்யானம் (''முனியே நான்முகனே'') உரைப்பர்.

இருபத்து நான்கு (மாயா சொரூபமாகிய) தத்துவங்களுங் கடந்து, நிர்வாண தசையில் திருமால் திருவடி சேர்த்தலென்னும் முறைப்படி 24 போர்வையும் களைந்து பின் ஸ்ரீ நம்மாழ்வார் ஏகாந்தத் திருமேனியிடன் ஸ்ரீ பொலிந்து நின்ற ஆதிப்பிரான் திருவடி தொழும் அற்புத ஸேவை மெய்சிலிர்க்கச் செய்யும். இது அவர் கடவுளடியடைந்து ஒளி வடிவமானதைக் குறிக்கும். 25-வது தத்துவம் பரமாத்மா. (ஜீவப்ரமைக்ய ரகசியம்)

| வரிசை எண்ணம் | திருநாள் விபரம் | ஆரம்பமாகும் மாதம், நக்ஷத்திரம் | முடிவாகும் நக்ஷத்திரம் | நடைபெறும் நாட்கள் |
|---|---|---|---|---|
| 1 | சித்திரைத் திருநாள் (பொலிந்துநின்றபிரான்) | சித்திரை மாதம் கார்த்திகை நக்ஷத்திரம் | உத்திர நக்ஷத்திரம் | 10 |
| 2 | வைகாசி பிரம்மோர்த்ஸவம் (ஸ்ரீ நம்மாழ்வார்) | வைகாசி மாதம் புனர்பூச நக்ஷத்திரம் | விசாக நக்ஷத்திரம் | 10 |
| 3 | திருவத்யயன உத்ஸவம் (ஸ்ரீ நம்மாழ்வார்) | மார்கழி மாதம் சுக்கில பிரதமை | ... | 22 |
| 4 | மாசித் திருநாள் (ஸ்ரீ நம்மாழ்வார்) | மாசி மாதம் மிருக சீர்ஷ நக்ஷத்திரம் | உத்திர நக்ஷத்திரம் | 12 |
| 5 | பங்குனித் திருநாள் (ஸ்ரீபொலிந்துநினறபிரான்) | பங்குனி மாதம் கார்த்திகை நக்ஷத்திரம் | விசாக நக்ஷத்திரம் | 10 |

## (3) குலசேகராழ்வார்

ஊர்: கொல்லிநகர். ஆண்டு: கலி 28

பராபவ, மாசி மாதம், புனர்பூச நக்ஷத்திரம் வளர்பிறை துவாதசி, வெள்ளிக்கிழமை அம்சம் கௌஸ்துபாம்சம்

தந்தையார் : சந்திரகுலநாதர்

இவர் தம் படை வலிமையால் பகைகெடுத்து நல்லாட்சி புரிந்து வரும்பொழுது, திருமால் திருவருள் வாய்க்கப்பெற்றுத் திருவரங்கம், திருப்பதி முதலான இடங்களுக்குச் சென்று, ஆங்காங்கே எப்பொழுதும் எம்பெருமானைக் காணவேண்டுமென்று கருதினார். முகுந்தமாலை பாடியருளினார்.

தினந்தோறும் மாலை வேளையில் இராமாயணம் கேட்பது வழக்கம். ஒருநாள் சீதையைக் காப்பதற்கு இலக்குவனை நிறுத்தி இராமன் தனியே கர தூஷணாதிகளுடன் போர்புரிவதற்குச் சென்றார்'' என்று புராணிகர் புகன்றதும் "ஸ்ரீராமனுக்கு என்ன தீங்கு நேரிடுமோ'' என்றஞ்சி, வில், வாள் கொண்டு நால்வகைப் படையும் திரட்டித் தாமே துணைக்கேகினார். அமைச்சர்கள் இதைக் கண்டஞ்சிப் புராணிகரைக் கொண்டு ஸ்ரீ ராமன் தானே தனிமையில் பதினாலாயிரவரையும் அழித்து மீண்டார்'' என்று தெரிவிக்கச் சொல்லி அரசரை மீட்டனர். குலசேகரர் வைஷ்ணவ பாகவதர்களிடம் மிகுந்த அன்பு பூண்டு நாடு காவாது இருப்பதை மந்திரிகள் கண்டு, திருமாலடியார்களிடம் வெறுப்பு உண்டாக்குவதற்காக, மன்னன் வழிபடும் விக்ரகத்தின் அணிகலன்களுள் ஓர் நவமணி மாலையை எடுத்து வைத்துத் திருமாலடியார் திருடியிருப்பர்'' என்றார்கள்.

அரசன், அவர்கள் அப்படிச் செயயாரென்று மெய்ப்பிக்க அவர்களுக்குப் பதிலாகத் தானே தன் கையைப் பாம்புக்குடத்திற்குள் விட்டு அது தன்னைக் கடியாதிருப்பதைக் காட்டினார். பின்பு மந்திரிகள் தம் பிழையைக் கூறிப் பொறுத்தருள வேண்டினர்.

இப்படிப்பட்ட அரசாட்சியை வெறுத்துத் தம் மகனுக்கு அரசுரிமையைக் கொடுத்துவிட்டு அடியாருடன் திருவரங்கம் சென்று பெருமாள் திருமொழி பாடினர். பாசுரம் 105

# 4. திருமழிசையாழ்வார்

ஊர் : திருமழிசை

காலம் துவாபரயுகம், 8, 92, 901 சித்தார்த்தி, தை, மகம், தேய்பிறைப் பிரதமை ஞாயிற்றுக்கிழமை

தாய், தந்தை : கருகாவதி பார்க்கவர்.

திருமழிசையை ஒரு தட்டிலும் நிலவுலகமெல்லாம் ஒரு தட்டிலுமாக வைத்து நிறுக்கப் பூவுலகு குறைவாகவும் மழிசை மிகுதியாகவும் இருக்கக்கண்டு, இதற்கு மஹீசார க்ஷேத்திரம் எனப் பெயரிட்டு நான்முகனானவன் அத்திரி, பிருகு, வசிட்டர், பார்க்கவர், ஆங்கீரசர் முதலான முனிவர்களைத் தவஞ் செய்ய அங்கனுப்பினர். பார்க்கவருக்கு வேள்விப் பயனால் ஒரு உரு வற்ற பிள்ளை பிறந்தது. அதைப் பெற்றோர் இகழ்ந்து ஒரு பிரம்புப் புதரில் விட்டுச் சென்றனர். திருமகள் திருவருளால் எல்லா உறுப்புகளையும் அம்மகவு பெற்றுப் பசியால் அழுதது.

பிரம்பறுக்கச் சென்ற திருவாளன் என்பான் குழந்தையை எடுத்துத் தம் மனைவி பங்கயச்செல்லியிடம் கொடுக்க இருவரும் தமக்கு வேறு மகவில்லாததனால் இதையே வளர்த்தனர்.

குழந்தை உண்ணாதும், அழாதும் வளர்ந்தது. ஒரு உழவனாகிய முதியவன் நாள்தோறும் இக்குழந்தைக்குப் பால்காய்ச்சி யளித்து உண்ணாத பிள்ளையை உண்ணப் பண்ணினான்.

இவர்கள் விருப்பத்திற்கிணங்க ஆழ்வார் அருளால் அவர்கள் இவருண்டமிச்சலை யருந்தி இளமைபெற்று ஓர் பிள்ளையையும் ஈன்றெடுத்தனர். அவனுக்குக் கணிகண்ணன் என்று பெயரிட்டு வளர்த்தனர்.

ஆழ்வார் 9-வது ஆண்டு முதல் 400 ஆண்டுகள் அட்டாங்க யோகம் பழகிப் பல சமய நூல்களையுமறிந்து "நான்முகன் திருவந்தாதி" 96 பாசுரங்கள் பாடி நோன்பு நோற்றனர்.

சிவபெருமான் உமாதேவியின் வேண்டுகோளுக்கிணங்கித் தன் நிழலையும் வெறுத்த முனிவனிடம் வந்து "என்ன வரம் வேண்டுமென்று கேட்க, முனிவர் "வீடுபேறு அல்லது ஒருயிரை உடலை விட்டகலச்செய்ய" வரம் கேட்டார். இரண்டும் முடியாதென்று சிவபெருமான் கூறித் தன்னை மதியாத ஆழ்வாரை

நெற்றிக்கண்ணாலெறிக்க, ஆழ்வாரும் தன்கால் நகக்கண் தீயைக் காட்ட அச்சூடு பொறுக்காது ஊழிக்கால மழையைப் பொழியச் செய்தார். சிவபிரான் பின்னர் ஆழ்வாருக்குப் பத்திசாரர் என்று பெயரிட்டு வாழ்த்திச் சென்றார்.

புலிமீது ஏறி விண்வழியாகச் சென்ற ஓர் இராக்கதன் இவர் தவத்தீயைத் தாண்டிச் செல்லமாட்டாமையையுணர்ந்து வந்து கண்டு கவசமும், முத்துமாலையும் நல்கினான். ஆழ்வார் அவற்றைப் பெறாமல் தன் வலியால் உயர்ந்த மெய்யுரையும் ஒன்பான் மணிமாலையும் காண்பிக்கக் கண்டு மகிழ்ந்து ''மகா பரிபூரணர்'' என்று வழிபட்டேகினன்.

ஒரு குகையில் தவஞ்செய்கையில் முதலாழ்வார் மூவரும் இவர் தவவொளியைக் கண்டு கிட்டிப்பார்க்க அவரும் இவர் களை மெய்யுணர்வாலுணர்ந்து தழுவி அவர்களுடன் மயிலாபுரம் சென்று கயிரவதீர்த்தக் கரையில் தவமியற்றினர். மீண்டும் திருமழிசைக்குவந்து திருமண் வேண்டித் தோண்ட அகப் படாமல் திருவேங்கிடமுடையான் திருவருளால் பெற்று மகிழ்ந் திருந்தார்.

அப்பொழுது தன்னருளாற் பிறந்த கணிகண்ணன் வந்து மாணவனாகத் தொண்டியற்றினான். தனக்குத் தொண்டாற் றிய ஓர் முதியவளையும் அவள் விருப்பத்திற்கேற்ப இளமையும் கட்டழகும் பெறும்படியருள் புரிந்தார் ஆழ்வார்.

இவளழகிலீடுபட்டு மணம்புரிந்து வாழ்ந்த பல்லவராயன் தனக்கு முதுமை நாளுக்கு நாள் வளர்வதையும், தன் மனைவி கட்டழகும், இளமையும் மாறாதிருப்பதையுமுணர்ந்து காதலி யைக் கேட்க, அவள் நம்மரண்மனையில் நாடோறும் இரந் துணணவரும் கணிகண்ணனின் ஆசிரியர் அருளைப் பெற்றால் இளமையெய்தலாம்' என்றாள்.

மன்னன் கணிகண்ணரிடம் அவராசிரியரை அழைத்துவரச் சொல்ல, ''அவர் வரார்'' என்று கணிகண்ணன் விடையிறுத் தான்.

அரசன் தன்னைப் புகழ்ந்து பாட்டியற்றச் சொல்லக் கணி கண்ணன் நிலையில்லா மக்களைப் பாட முடியாதென்றார். அரசன் மீண்டும் வற்புறுத்தவே கணிகண்ணன் வெஃகாவி லுள்ள திருமாலைப் பாடினான்.

உடனே சினங்கொண்ட மன்னன் தன் நாட்டைவிட்டு நீங்கச் சொல்ல, அவரும் தன்னாசிரியரிடம் கூற, ஆசிரியர் ஆழ்வாரும் நீ சென்றால் யானும் யான் சென்றால் எம்பெருமானும் ஏகுவோமென்று.

'கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சிமணி வண்ணா நீ கிடக்கவேண்டா—துணிவுடைய செந்நரப் புலவனும் போகின்றேன். நீயுமுன்றன் பைந்நாகப பாய் சுருட்டிக் கொள்' என்றுரைத்தேகினர். திருமாலும், ஏனைய தேவர்களும் பின்தொடர்ந்தனர். நாடு அழகிழ்ந்தது. அரசனும், அமைச்சருங்கண்டு கலங்கி ''ஓரிரவிருக்கை'' என்னும் ஊரில் சென்று ஆழ்வாரைக் கண்டு இவர்கள் காலில் வீழ்ந்து பிழை பொறுக்க வேண்ட ஆழ்வாரும்,

''கணி கண்ணன் போக்கொழிந்தான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்—துணிபுடைய செந்நாப் புலவனும் போக்கெழிந்தேன் நீயுமுன்றன் பைந்நாகப் பாய் படுத்துக்கொள்'', என்று பாடி மீண்டார். இதை வெளிப் படுத்தத் திருமாலும் அங்கு இடது திருக்கை கீழாகப் பள்ளி கொணடருள்கின்றார்.

பின்னர் இவர் குடந்தைக்கு வந்து 2300 ஆண்டுகள் தவமியற்றினார். இவ்வாறு உடலுடன் உணவின்றி 4700 ஆண்டுகள் வாழ்ந்து நான்முகன் திருவந்தாதி, திருச்சந்த விருத்தம் பாடி உலகை உய்வித்தருளினார்.

நான்முகன் திருவந்தாதி 96 திருச்சந்தவிருத்தம் 120 ஆகச் செய்யுள் 216, 5, 6, 7 முதலாழ்வார்கள்.

பொய்கையார் : ஊர் காஞ்சிபுரம், திருவெஃகா பொய்கை புஷ்கரணித் தாமரை மலர்,

காலம் : துவாபரயுகம் 8, 62 901 சித்தார்த்தி ஐப்பதி திருவோணம் வளர்பிறை, அஷ்டமி செவ்வாய்.

அம்ஸம் : பாஞ்ச சந்யம் செய்யுள் முதற்றிருவந்தாதி 100

## பூதத்தார்

ஊர் : திருக்கடன் மல்லையில் குருக்கத்தி மலர்.

காலம் : துவாபரம், 8, 62, 901 சித்தார்த்தி ஐப்பசி அவிட்டம், வளர்பிறை நவமி, புதன்.

அம்ஸம் : ஸ்ரீ கதை செய்யுள் இரண்டாம் திருவந்தாதி 100.

## பேயார்

ஊர்: திருமயிலை கேசவப் பெருமாள் கோயிலருகேயுள்ள கிணற்றில் மலர்ந்த செவ்வல்லி.

காலம்: துவாபரம் 8, 62, 901 சித்தார்த்தி ஐப்பசி சதயம்; வளர்பிறை தசமி வியாழக்கிழமை

அம்ஸம்: ஸ்ரீ நந்தகம் செய்யுள் மூன்றாந் திருவந்தாதி வெண்பா 100

இவர்கள் மூவரும் வெவ்வேறிடங்களிற்றோன்றித் திருமாலிடம அன்பு பூண்டு நாளுக்கொரு ஊராகத் திரிந்து வரும் பொழுது திருமால் திருவருளால் திருக்கோயிலூர் வந்து மழையுங் காற்றுந் தாங்காமல் ஆண்டுள்ள ஓரிடை கழியில் பொய்கையார் போய்ப் படுத்திருந்தார். சிறிதுபொழுதில் பூதத்தார் வந்து இடங்கேட்டார். "இங்கு ஒருவர்தான் படுக்க முடியுமென்று" பொய்கையார் புகல, "அப்படியானால் இருவரிருக்கலாம்" என்று கூறிச்சென்றார். இருவருமிருக்கும் பொழுது பேயார் வந்து "மூவர் நிற்கலாம்" என்று வந்து சேர்ந்துகொண்டார்.

மூவரும் ஒருவர் வரலாற்றை ஒருவர் கேட்டறிந்துகொண்டனர். அவர்களுடன் திருமாலும் திருமார்பில் திருமாமகளுடன் வந்து சேர்ந்து நெருங்கி நின்றார். இருட்டி வந்து நெருக்குபவரைப் பொய்கையார் வையந்தகளியாய், வார்கடல் நெய்யாகக் கதிரோன் விளக்காகக் கொண்டு சுடராழியானைக் கண்டு சொன்மாலை சூட்டினார்.

பூதத்தார் அன்பே அகலாக, ஆர்வம் நெய்யாக இன்புருகு சிந்தை இடுதிரியாக, மெய்யறிவாகிய சுடர்விளக்கேற்றி, நாரணற்கு அறிவு நிறைந்த தமிழ்ப் பாக்களைச் செய்தார். பேயார் திருமகளையும், பொன்மேனியையும், அணி நிறமும் பொன்னாழியும், புரிசங்கும் கடல் வண்ணனிடம் கண்டு பாடினார்.

## தொண்டரடிப்பொடிகள்

இடம்: மண்டங்குடி

காலம்: கலி 298 ப்ரபவ மார்கழிக்கேட்டை, தேய்பிறை, சதுர்த்தசி, செவ்வாய்க்கிழமை

அம்ஸம் : வனமாலிகை

குடிப்பிறப்பு : வைஷ்ணவப்பிராமணர்

இட்டபெயர் : விப்ரநாராயணர்

இளமையிற் கலை பயின்று திருவரங்கம் வந்து திருமாலழகி லீடுபட்டுத் திருநந்தவனத்தில் துளவத் தொண்டு புரிந்து வந்தார்.

ஒருநாள் திருக்கரம்பனூரில் அழகே உருவெடுத்தாற் போன்ற தேவதேவி என்னும் பரத்தை, தன் தமக்கையுடன் உறையூரில் சோழனைக் கண்டு மீளும் வழியில் நந்தவனத்தை யும் பூச்செடிகளையும் பார்த்து வரும்போது விப்ரநாரா யணர் தம்மைக் கண்டும் பாராதிருந்தார்.

இவர் உயர்வைத் தமக்கை கூறக்கேட்ட தேவதேவி அடியா ராகிய இவரை என்னைக் காதலிக்குமாறு செய்யாவிட்டால் நின்னடிமையாகிறேனென்று உறுதியுரைத்தாள்.

தானும், தன்னணிகலனையும் பட்டாலான ஆடையையு மகற்றித் துவராடையுடுத்துத் துறவுபூண்டும் ஆழ்வாரை வழி பட்டு அவருடன் தொண்டியற்றினள். ஒருநாள் மழை வர ஆழ்வார் நனைந்திருந்த தாசிக்கு இடமும் தன் மேலாடையும் வழங்கி அருகே வைத்திருந்தார். அப்போதவள் கால் பிடிப்ப தாகக் கூறினள். அதற்கிடங்கொடுத்து அவள் செயலிலும், அழகிலும், பணிவிடையிலுமீடுபட்டு அவள் வயத்தரானார். பின்பு பரத்தை தன் ஆடையணிகளெல்லாம் அணிந்து அவரை மயக்கிவிட்டாள். இவர் கைப்பொருளைக் கவர்ந்து வெளியே அனுப்பிவிட்டாள். தலைக் கடையில் கிடந்த இவ்வாழ்வாருக் கிரங்கித் திருவரங்கன் தன் பொன் வட்டிலை அவளிடம் கொடுத்து ''இதை விப்ரநாராயணர் அளித்தார். அவர் ஏவலால் வந்த அழகியமணவாளனென்னும் பெயரினன்'' என்றார். அவளும் மகிழ்ந்து ஆழ்வாரை ஏற்றுக் கொண் டாள். மறுநாள் கோயிலில் வட்டிலில்லாததை அறிந்து அரசன் ஏவலர் தேடி வந்தனர் கோவில் பணியாட்களைப் பிடித்துச் சிறை வைத்தனர். அவர்களில் ஒருவனுடைய காதலி தாசி வீட்டில் வேலை செய்பவள். அவள் தன் காதலனை மீட்க, வட்டில் தேவதேவி வீட்டிலிருப்பதைக் கூறினாள். அரசன் ஏவலர் அவளை அரசனிடம் கொண்டு செல்ல, அவள் தனக்குத் கிடைத்த வரலாற்றை அறிவித்தாள். உடனே ஆழ்வாரையும்

சிறை செய்ய அன்றிரவு அழகிய மணவாளன் கனவிற்றோன்றி அரசனுக்கு உண்மையை உணர்த்தினார்.

அரசன் ஆழ்வாரை விடுவித்து அவருக்காட்பட்டான். மீண்டும் ஆழ்வார் துளவத் தொண்டியற்றத் தேவதேவியும் தன் பொருளைத் திருமாலுக்களித்துத் துறவு பூண்டு திருவல கிட்டுத் தொண்டியற்றினாள்.

| | |
|---|---|
| ஆழ்வாரருளிச் செயல் திருமாலை | 45 |
| திருப்பள்ளியெழுச்சி | 10 |
| | 55 |

## திருப்பாணாழ்வார்

இடம்: உறையூர், செந்நெற்பயிர்

காலம்: கலி 343 துன்மதி, கார்த்திகை ரோகணி, தேய் பிறை த்விதியை புதன்கிழமை

அம்ஸம்: ஸ்ரீ வத்ஸம்; குடிப்பிறப்பு—பஞ்சமர்.

சோழன் தர்மவர்மாவின் மகள், உறையூர் நாச்சியார் கன்னியாகத் தோட்டத்தில் விளையாடும் பொழுதில் திருமால் வேட்டையாடப் பரியேறி வந்தார். அவரழகில்பட்டுக் கன்னியும் "அழகிய மணவாளனையன்றி வேறு யாரையும் மணம் புரியேன்" என்றாள். அவள் விருப்பத்திற்கேற்ப அரங்க நாதன் உடன்பாட்டைப் பெற்று அவருக்கே மணம் புரிந்தருளிச் சீர்வகை நல்கித் தன்னரசையும் அவர்க்களித்து அவர் பெயரால் அரசு புரிந்து வந்தான்.

அந்நாளில் பாணன் பிறந்து வளர்ந்து வீடுபேறெய்தும் விருப்புடன், தன் பிறப்பினிழிவால் காலவழக்கப்படி அரங்கத்தை மிதியாது காவிரியின் தென்கரையில் கோவிலுக்கெதிரே நின்று யாழேந்திப்பாடி மகிழ்ந்தார்.

ஒருநாள் திருமாலை வழிபட்டுவரும் ஸ்ரீலோக சாரங்க மகாமுனிவர் காவிரியில் நீராடவர, ஓர் பாணன் கரையில் பாடுவதைக் கண்டு அப்பால் செல்லச்சொன்னார். ஆழ்ந்த அன்பில் ஈடுபட்ட ஆழ்வார் இவர் சொல்லைக் கேளாதும் பாராதும், இருப்பதையறிந்து "இறுமாப்புடன் இருக்கிறா"னென்று கல்லாலடித்துக் காயப்படுத்தினர்.

திருவரங்கநாதன் திருமேனியில் கல்பட்ட புண்ணும் குருதி யொழுக்குங் கண்டு கலக்கமெய்த, இரவில் எம்பெருமான் றோன்றி ''நமக்குவப்பான அடியானை நீர் புண்படுத்தியது எமக்கேயாயிற்று. அவனை நம்மிடம் அழைத்து வாரும்'' என்று சொல்லவும், மறுநாட் காலையில் காவிரியாடிப் பாணரிடம் சென்றார்.

வழக்கம்போலப் பாணர் நதிக்கரையில் நிற்கையில், முனிவர் தம்மிடம் நெருங்கி வருவதைப் பார்த்து இன்னும் துன் புறுத்துவதற்கே வருவதாக எண்ணி ஓட, முநீந்திரர் அவரிடம் உண்மையைக் கூறி அரங்கத்தரவணையானிடம் அழைத்தனர். ''தீண்டாத பிறப்பினன், திருவரங்கம் துதிக்கலாகாதெனச் சொல்லி மறுக்கவே, ''அப்படியானால் எனது தோளில் ஏறி வாரு''மென்று தூக்கிச் சென்று திருமால் முன்பு நிறுத்தினர்.

பாம்பணைப் பள்ளிகொண்ட பைந்துளவ மாலினையடி முதல் முடிவரை கண்டுகளித்து அமலனாதிப்பிரான் முதலிய 10 பரசுரங்கள் பாடியருளினார்.

அணியரங்கனும் ஆழ்வாரை யாவருங்காணத் திருவடியி லேற்றிக் கொண்டார்.

செய்த செய்யுள் அமலனாதிபிரான் 10

## திருமங்கையாழ்வார்

இடம் : திருவாலி திருநகரி, திருக்குறையலூர்.

காலம் : கலி 399 நள கார்த்திகையில் கார்த்திகை.

நிறைநிலா—வியாழன் அம்ஸம்—சாரங்கம்

தந்தை—நீலன் குடிப்பிறப்பு—கள்ளர்

இட்ட பெயர்—நீலநிறத்தார் (பரகாலன், கலியன்)

சோழமன்னரிடம் படைமறவராக இருந்து, பல போர் களில் வெல்ல, மன்னன் மகிழ்ந்து இவரை ஓர் குறுநில மன்ன னாக்கினன். இவ்வாறிருக்க, நாடோறும சில தெய்வப் பெண்டிர் திருமால் நாட்டுத் தாமரைப் பொய்கையில் நீராடிச் சென்றனர். இவர்களுடன் திருமாமகளும் வந்து நீராடிக் குமுத மலர் பறித்தனள். ஏனையோர் இவளை விட்டேகினர். அத

னால் மானிடப் பெண்ணானாள். அங்குக் குளிக்க வந்த மருத்துவ அடியார் கண்டு அவள் நிலையையுணர்ந்து தமதில்லம் கொண்டேகினார். அவள் மணப்பருவமெய்தினள்.

இவளழகையறிந்த ஆழ்வார் மருத்துவரிடம் சென்று இவள் வரலாற்றையறிந்து ''யாருக்கு மணம் செய்யப் போகிறீர்'' என்று கேட்டுத் தான் மணப்பதாகக் கூறினார்.

குமுதம் கொய்த குமுதவல்லி 'என்னை மணப்பவர் ஓராண்டு நாள்தொறும் 1008 அடியார்கட்கு அமுது படைத்தருள வேண்டுமென்று' புகன்றனள். ஆழ்வாரும் அதற்கியைந்து தினம் 1008 அடியார்க்கடிசிலிட்டனர், கைப்பணமும் மன்னர்க்களிக்க வேண்டிய பகுதிப் பணமும் செலவாயின். அரசனும் வெகுண்டு ஆழ்வாரைப் போரில் பொருது சிறை செய்தனன்.

## கோவில் நிர்வாகம்

இவ்வாலயம் அரசாங்கததால் அங்கீகாரம் செய்யப்பட்ட ஆலயங்களுள் ஒன்று. தமிழக அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திற்குட்பட்டது. ஷை கோயில் நிர்வாகம் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட நிர்வாக அதிகாரியின் மேற்பார்வையில் நடைபெற்றுவருகிறது. இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையினரால் நியமிக்கப்பட்ட தர்மகர்த்தர்கள் ஐந்து பேர் அடங்கிய குழுவின் ஆலோசனைப்படி ஷை கோயில் நிர்வாகம் நடைபெற்றுவருகிறது.

## வருமானம்

இவ்வாலயத்திற்கு அரசாங்கத்தாரால் கொடுக்கப்படும் மானியம் வருடம் ஒன்றுக்கு ரூ. 16940—12 ஆகும். கோவிலுக்கு பாத்தியப்பட்ட நஞ்சை நிலங்களிலிருந்து வருடம் ஒன்றுக்கு 325 கோட்டை நெல் கிடைக்கிறது. மேலே கண்ட வரவுகளிலிருந்து ஷை கோவிலின் நித்திய படித்தரம், பூஜை, திருவிழாக்கள் நடைபெற்று வருகிறன்ன.

முற்றும்,

## 9. இலக்கியங்கள்

ஸ்ரீ மதுரகவிகள் : ஸ்ரீ நம்மாழ்வாரைப்பற்றிப் பாடிய பாடல்கள்

(1) கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணிய பெருமாயன் என்னப்பனில்
நண்ணித் தென்குருகூர்நம்பி யென்றக்கால்
அண்ணிக்கும் அமுதூறும் என்னாவுக்கே

(2) நாவினால் நவிற்றுஇன்ப மெய்தினேன்
மேவினேன் அவன்பொன்னடி மெய்ம்மையே
தேவுமற் றறியேன் குருகூர்நம்பி
பாவினின் னிசை பாடித்திரிவனே.

(3) திரிதந் தாகிலும் தேவபிரானுடை
கரியகோலத் திருவுருக் காண்பன்நான்
பெரியவண் குருகூர்நகர் நம்பிக்குஆள்
உரியனாய் அடியேன்பெற்ற நன்மையே.

(4) நன்மையால்மிக்க நான்மறை யாளர்கள்
புன்மையாகக் கருதுவ ராதலின்
அன்னையாய் அத்தனாய் என்னையாண்டிடும்
தன்மையான் சடகோபன் என்நம்பியே.

(5) நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும்
நம்பினேன் மடவாரையும் முன்னெலாம்
செம்பொன்மாடத் திருகுருகூர் நம்பிக்கு
அன்பனாய் அடியேன் சதிர்த்தேன்இன்றே.

(6) இன்றுதொட்டும் எழுமையும் எம்பிரான்
நின்றுதன் புகழ்ஏத்த அருளினான்
குன்றமாடத் திருக்குருகூர் நம்பி
என்றும்என்னை இகழ்விலன் காண்மினே.

(7) கண்டுகொண்டு என்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றியருளினான்.
எண்டிசையும் அறிய இயம்புகேன்
ஒண்தமிழ்ச் சடகோபன் அருளையே.

(8) அருள் கொண்டாடும் அடியவர் இன்புற
அருளினான் அவ்வருமறையின் பொருள்
அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ்ப் பாடினான்
அருள்கண்டீர் இவ்வுலகினில் மிக்கதே.

(9) துக்கவேதியர் வேதத்தி னுட்பொருள்
நிற்கப்பாடி என்னெஞ்சுள் நிறுத்தினான்
தக்கசீர்ச் சடகோபன் என் நம்பிக்கு
ஆள்புக்காதல் அடிமைப் பயனன்றே.

(10) பயனன் றாகிலும் பாங்கலராகிலும்
செயல்நன்றாகத் திருத்திப் பணிகொள்வான்
குயில்நின்றார் பொழில்சூழ் குருகூர்நம்பி
முயல்கின்றேன் உன்றன் மொய்கழற்கன்பையே.

(11) அன்பன்தன்னை அடைந்தவர்கட் கெல்லாம்
அன்பன் தென்குருகூர் நம்பிக்கு
அன்பனாய் மதுரகவி சொன்னசொல்
நம்புவார்பதி வைகுந்தங் காண்மினே''

—மரதுகவிகள்

## ஸ்ரீநம்மாழ்வார் திருக்குருகூரைப் பற்றிப் பாடிய பாடல்கள்

1. ஒன்றுந்தேவு முலகு முயிருமற்றும்யாதுமில்லா
அன்றுநான்முகன் றன்னோடு தேவருலகோடுயிர்
படைத்தான்
குன்றம்போல் மணிமாட நீடு திருக்குருகூரதனுள்
நின்றவாதிப்பிரான் நிற்க மற்றெத் தெய்வம் நாடுதிரே.

2. நாடிநீர் வணங்குந் தெய்வமும் உம்மையுமுன்
படைத்தான்
வீடில்சீர்ப் புகழ் ஆதிப்பிரான் அவன் மேவியுறை கோயில்
மாடமாளிகை சூழ்ந்தழகாய்த் திருக்குருகூரதனைப்
பாடிப் பாடிப்பரவிச் சென்மின்கள் பல்லுலகீர் பரந்தே.

3. பரந்ததெய்வமும் பல்லுலகும்படைத்தன்றுடனேவிழுங்கிக்
கரந்துமிழ்ந்து கடந்திடந்தது கண்டுந்தெளிய கில்லீர்
சிரங்களால் அமரர்வணங்குந் திருக்குருகூரதனுள்
பரன்றிறமன்றிப் பல்லுலகீர் தெய்வமற்றில்லை
பேசுமினே.

4. பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும்
நாயகனவனே கபாலநன் மோக்கத்துக்கண்டு கொண்மின்
தேசமாமிதின் சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்
ஈசன் பாலோரவம் பறைதல் என்னவதிலிங்கியர்க்கே.

5. இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணருஞ் சாக்கியரும்
வலிந்துவாது செய்வீர்களு மற்றுநுந் தெய்வமுமாகி
நின்றான்.

மலிந்து செந்நெல்கவரி வீசுந்திருக்குருகூரதனுள்
பொலிந்து நின்றபிரான் கண்டீர் ஒன்றும் பொய்யில்லை
போற்றுமினே.

6. போற்றி மற்றோர் தெய்வம்பேணப் புறத்திட்டு
உம்மையின்னே.

தேற்றிவைத்தது எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லை
என்றே

சேற்றில் செந்நெல் கமலமோங்கு திருக்குருகூரதனுள்
ஆற்றவல்லவன் மாயம் கண்டீர் அது
அறிந்தறிந்தோடுமினே.

7. ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம்
பாடியாடிப் பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்
கூடிவானவரேத்த நின்றதிருக்குருகூரதனுள்
ஆடுபுட்கொடி யாதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே.

8. புக்கடிமை யினாற்றன்னைக்கண்ட
மார்க்கண்டேயனவனை

நக்கபிரானு மன்றுய்யக்கொண்டது நாராயணனருளே
கொக்கலர் தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள்
மிக்க வாதிப்பிரான் நிற்கமற்றைத் தெய்வம்விளம்புதிரே.

9. விளம்புமாறு சமயமும்வையாகியு மற்றுந்தன் பால்
அளந்து காண்டற்கரியனாகிய ஆதிப்பிராமணரும்
வளங்கொள் தண்பணை சூழ்ந்தழகாய திருக்குருகூரதனை
உளங்கொள் ஞானத்துவைம்மினும்மை உய்யக்கொண்டு
போகுறிலே.

10. உறுவதா வதெத்தேவு மெவ்வுலகங்களுமற்றுந்தன் பால்
மறுவில் மூர்த்தியோ டொத்தித்தனையு நின்றவண்ணம்
நிற்கவே

செறுவில் செந்நெல் கரும்பொ டோங்கு திருக்குருகூரதனுள்
குறியமாணுருவாகிய நீள் குடக் கூத்தனுக்கு
ஆட்செய்வதே.

11. ஆட்செய்தாழிப் பிரானைச் சேர்ந்தவன் வண்குருகூர் நகரான்
நாட்கமழ் மகிழ்மாலை மார்பினன் மாறன் சடகோபன்
வேட்கையால் சொன்னபாடல் ஆயிரத்துள் இப்பத்தும் வல்லார்
மீட்சியின்றி வைகுந்தமா நகர் மற்றதுகையதுவே.

—நம்மாழ்வார்

---

(இரண்டாம் பக்கத் தொடர்ச்சி)

64 ஆழ்வார் திருஉண்ணாழி பிரகாரம்
65 ஆழ்வார் சந்நதி த்வஜ ஸ்தம்பம்
66 நாதமுனி ஸந்நதி
67 தைலக் காப்பு அறை
68 பல்லக்கு அறை
69 யாகசாலை மண்டபம்
70 யாகசாலை
71 பன்னிரண்டாழ்வார் ஸந்நதி
72 நரசிம்மன் ஸந்நதி
73 சலவை அறை
74 திருவேங்கடமுடையான் ஸந்நதி
75 பந்தல் சாமான் அறை
76, 77 வசந்த மண்டபங்கள்
78 நந்தவனம்
79 இராப்பந்தி கொட்டகை
80 நாலுகால் மண்டபம்
81 ஸ்ரீ பக்ஷிராஜன் ஸந்நதி